21st January 1961]

இருக்கக்கூடிய இடங்களில் இன்னும் போதுமான மாணவர்கள் சேரவில்லை. ஆகையினால் அங்கெல்லாம் புதியதாக கல்லூரிகள் ஏற்படுத்துவது என்பது பற்றி கொஞ்சம் நிதானமாக யோசித்துத் தான் முடிவு செய்யப்படுகிறது.

SRI V. SANKARAN : ஏற்கனவே உள்ள சென்னை சர்வகலா சாலை தன்னைப்போன்று இன்னொரு சர்வகலாசாலை இந்த ராஜ்யத்தில் சில மாவட்டங்களைக் கொண்டு வைத்தால் தன்னுடைய ஆதிக்கம் ஓரளவு குறைந்துவிடும் என்ற காரணத்தை வைத்து அதற்கு மாறாக அபிப்பிராயம் கொடுத்தால், அதை யெல்லாம் மனதில் கொண்டு பரிசீலிப்பதற்கு சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : செனட்டில் இருக்கக் கூடியவர்கள் சென்னையிலும், சென்னைக்கு பக்கத்திலும் மட்டும் இருக்கக்கூடியவர்கள் அல்ல. நமது ராஜ்யம் முழுவதிலும் எல்லாப் பகுதிகளிலும் இருந்து வந்திருக்கக்கூடியவர்கள் செனட்டில் இருக்கிறார்கள். எல்லாப் பகுதிகளின் அவசியத்தையும் மனதில் வைத்து அவர்கள் முடிவு செய்வார்கள் என்று நான் நம்புகிறேன். அதிலும் சர்வகலாசாலையில் இருக்கக்கூடிய அறிஞர்கள் இதுபோன்று போட்டி வந்துவிடும் என்ற அடிப்படையில் நினைக்க மாட்டார்கள் என்று நான் கருதுகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : அரசாங்கம் இன்னொரு சர்வகலாசாலை தொடங்குவது பற்றி சென்னை சர்வகலாசாலைக்கும், யுனிவர்ஸிடி கிராண்ட்ஸ் கமிஷனுக்கும் என்ன யோசனைகள் அனுப்பியிருக்கிறார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மதுரையில் இன்னொரு சர்வகலாசாலை ஏற்படுத்தலாமா, அதுபற்றி கருத்து என்ன என்று யுனிவர்ஸிடியைக் கேட்டிருக்கிறோம்.

*Nakkambadi Village Lake*

* 76 *Q.*—SRI T. R. RAMAMIRTHA THONDAMAN (on behalf of SRI S. RAMALINGA PADAYACHI) : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருச்சி ஜில்லா உடையார்பாளையம் தாலுகா நக்கம்பாடி கிராம ஏரியை விஸ்தரிக்கும் உத்தேசம் உண்டா ?

(இ) அப்படியாயின், அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப் பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) The matter is under consideration of the Chief Engineer (Irrigation).